[13th November 1961

**SRI P. G. MANICKAM** : சார், ஹரிஜன நல இலாகா மூலம் சில பள்ளிகள் நடத்தப்பட்டு வருகின்றன. அந்தப் பள்ளிகளுக்கும் இந்த உதவி கிடைக்குமா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM** : இப்போது ஹரிஜன இலாகா மூலம் நடத்தப்படும் பள்ளிகளுக்கு இந்த உதவி கிடைக்கவில்லை. அதற்குக் கொடுக்க வேண்டுமென்பதுதான் சர்க்காரின் உத்தேசம்.

**SRI S. M. ANNAMALAI** : இந்தப் பள்ளிகளில் பொருள்களை விநியோகிக்கும் பொறுப்பு அந்தப் பள்ளியின் தலைமை ஆசிரியரிடமும் அந்தக் கணக்கு வழக்குகளை மேற்பார்க்கும் பொறுப்பு ஒரு ஆசிரியரிடமும் ஒப்படைக்கப்பட்டிருப்பதால் அது சரியாக இல்லையென்று சொல்லப்படுகிறதே. அதை மாற்றி பஞ்சாயத்து போர்டு தலைவரையே இதற்கும் தலைவராகப் போட ஏற்பாடு செய்வார்களா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM** : இந்தக் காரியங்களை யெல்லாம் பள்ளிக்கூடத்திலேயே பணியாற்றுகின்றவர்கள் பார்த்தால்தான் நல்ல முறையில் மேற்பார்க்க முடியும். வெளியில் இருப்பவர்களைப் போட்டால் முழு நேரத்தையும் இதற்காகவே செலவு செய்யக் கூடியவர்களாக இருந்தால்தான் முடியும். தற்போது இருக்கக்கூடிய முறையிலேயே சரியானபடி நடந்து கொண்டு வருகிறது. ஆகவே இதில் பஞ்சாயத்து போர்டு தலைவரைக் கொண்டு வந்து இதில் போட்டுக் குழப்ப வேண்டிய அவசியம் இல்லையென்பது என்னுடைய கருத்து.

SRI K. VINAYAKAM : As per the programme laid down by us regarding the consumption of these gift articles, how long they are expected to last and may I know whether steps have been taken to renew this kind of help from the care organization and whether the care organization has shown any signs that they will continue to help us in times of necessity?

THE HON. SRI C. SUBRAMANIAM : I think I have already answered the question. The present allotment would last for about 10 months. We have started the programme in October. We will have to exclude the holidays. If we do so, the present consignment will last till about next October. The idea is not to stop it after one year. The care organization has assured us that it would be continued for a sufficiently long period.

*Poramboke lands (North Arcot district)*

*2024 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN (on behalf of **SRI S. R. MUNISAMI** : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவு செய்து கீழ்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

வடாற்காடு மாவட்ட விவசாயிகள் அனுபவித்துவரும் விவசாயத்திற்கு லாயக்குள்ள சர்க்கார் புறம்போக்கு நிலங்களுக்கு தண்ட தீர்வையைக் குறைக்க உத்தேசமுண்டா ?

**THE HON. SRI M. A. MANICKAVELU : No. Sir.**